உ

சிவமயம்

# சிகாமணிப்பதிகம்.

இஃது

அவிநாசிநாத சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளியது.



நெற்குன்றம்,

சு. பொன்னுசாமி பிள்ளையவர்களால்

திருக்கோவலூர்

... விலாச அச்சுக்கூடத்தில்

...ப்பெற்றது.

...ஷய

உ

சிவமயம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் றிருவடி வாழ்க.

# சிகாமணிப் பதிகம்

திருவளர் கயிலைச் சயிலமுஞ் சயிலச்
செல்வியுந் தூம்புடை யெயிற்றுத்
தீவிடப் பணியும் பாலலோ சனமுந்
திரையெறி வாநதி மதியுங்
கருநிறச் சிறுகட் புகர்முகச் சருள்கைக்
கடாக்களிற் றுரிவையம் போர்வை
கனலுமிழ் மழுமான் கொடும்புலி யுடையுங்
காந்தெனைப் பணிகொள நினைந்தே
பெருகொளி யருளே திருவடி வாகப்
பேரளி முதலவோர் நான்கும்
பேருறுப் பாக வோருருத் தாங்கிப்
பெருந்தரைக் கண்ணின்வந் தெனக்கு
வருளொடும் வேதா கமச்சிரப் பொருளை
யருளிய கருணைவா ரிதியே
யணிகிளர் கோவூ ரினகரில்வா ழீசே
யாறுமா முகசிகா மணியே.

கனதிரைச் சலரா சியிற்படு கிற
கலந்துறு முவரினை மேகங்
கதிபெறப் பிரித்துத் தீம்புன லாக்கிக்
காசினி போற்றும ...

வினையினு லுதறி தனிற்புகுந் ததுவாம்
வெள்ளிய நீரினைப் போல
வெய்யவஞ் ஞான மலத்துக ணீங்க
விரைமலர்ப் பதஞ்சிரத் திருத்தி
யுனுமன மாதி யிகந்தநுண் பொருளை
யுரையின்றி யேயெனக் குரைத்தே
யுயர்நிலத் தலத்தி லுய்க்கவு மதைவிட்
டுழலுவே னுய்யுமா றுளதோ
வனையினு மும்மை யன்படி யாருக்
கருளிய கருணைவா ரிதியே
யணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (உ)

உடறனி லுறையு முயிரினை யியக்கு
மொருபொரு ளிலிங்கம தாக
வுயர்தருவேத மந்திரங் கிரியா
தீக்கையாற் காதலத் துய்த்தே
விடயம்பா தொன்றிங் கடையினு மதனை
விளம்புருச் சுவைநிறை வாக்கி
மெய்யின்மூன் றதனி லுறைதரு மிட்ட
மேற்பிரா ணபாவலிங் கத்திற்
றிடமுட னர்ப்பித் துண்ணமேல் வினையுஞ்
சிதையுமென் றருளிய பின்பு
செங்கையி லிங்க கோளக மதனிற்
றிருட்டியு மிமைக்குத லின்றி

யடைவுடன் விழித்தே யிருந்துநின் போத
மகற்றிடென் றுரைத்தவா ரமுதே
யணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (௫)

கதிமிகு மனமா கியபில வங்கள்
கால்வழி கொடுநெடு மரமாங்
காத்திர மதனி லுறுபொறிச் சினையிற்
கறங்கெனச் சுழன் றுபாய்ந் தெழுந்தே
யிதமுடன் புலனுங் கனியுணத் தாவு
மிதுதனை யுனதரு ளுணு
வீர்த்தறிவென்னுந் தறிதனி லிசைத்தே
யிராப்பக லிலாவிடத் துதிக்கு
மதுவொழு கியவா னந்தநற் கனியை
மகிழ்ந்துணும் வாழ்வெனக் கருள்வாய்
மஞ்சுகண் படுசூ ழிஞ்சியு மதிதோய்
மாடமு நீடுகோ புரமு
மதிகவான் கங்கைப் புனலெனப் பெருகி
யலையெறி பெண்ணையா றதுசூ
மணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (௪)

சிவமரு ளணுவு மலந்திரோ பவமுஞ்
செப்பிய வஞ்செழுத் ததனிற்

றிரோபவ மலமூம் வரைந்துநின் றிடுமோர்
சிவமுதன் மூன்றிலவ் வனுவை
நவமதா நடுவில் வைத்திரு பாலு
நல்லருட் சிவமதை நிறுவி
நன்குறும் பஞ்சாக் கரந்தனை யருளே
நாவெனக் கொடுசெபி யெனவே
பவமெனுங் கடற்கோ ரம்பியா யருளும்
பான்மையை மறப்பனோ வடியேன்
பராபர நித்யா னந்தபே ரொளியே
பரசுகோ ததியிடத் தமுதே
யவிரொளி மணிமா டக்கொடி மதியை
யகலக லுதியென வோச்சு
மணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முககிகா மணியே. (ரு)

சத்தினி பாத விவேகமென் னிடத்திற்
றனிலா திடத்துநற் கருணை
தான்மிகக் கூர்ந்தே திரிபுடி கடந்த
தற்பர ஞானம தூதவு
முத்திரை மூன்றுங் கைத்தல நெல்லிக்
கனியென மோனமா யருளு
முதல்வநின் றணக்கோ ருதவுகைம் மாறு
மும்மையா முலகினுங் காணேன்
பொய்த்தழியுடம்போடுயிர்பொருண்மூன்றும்
பொருந்தவே கொடுக்குவ மென்றூற்

பொருவிலி நீயு மென்னையாட் கொள்ளும்
போதனைக் குதகங்கொண் டனையா
லத்தனே யமலா விமலசிற் சொரூப
வைந்தவித் தோருளத் தமுதே
யணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (௬)

பரசிவ மெனவும் பரகுரு வெனவும்
பகர்பொரு ளிரண்டுமொப் பெனவே
பரனரு ளுயரா கமமுறை செயினும்
பரமனுக் குயர்குரு வெனவே
திரமுட னறிந்தே னெவ்விதத் தென்னிற்
செப்புவன் சிவன்விபுத் துவமாய்ச்
செறியினு முயிர்க ளறிகிலா வகையைத்
தேசிக வுருவினாற் சிவன்றன்
கரவினை யுயிர்க ளறியவா கமநூற்
கலையினா லியமமா தியினாற்
காட்டிவீ டடைய நாட்டம்வைத் தவினாற்
காரணங் குருவலா துளதோ
வரியநின் பெருமைக் குவமையிப் புவியி
லாய்ந்தெடுத் துரைக்கவு மரிதே
யணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (௭)

கருத்தடங் கியதே முத்தியு மதுதான்
கையகன் றிடிற்பிறப் பெனவே
கயனெடு வேற்க ணுமையவ டனக்குக்
கயிலையி லுரைத்தவப் படியே
திரைத்தடங் கடல்சூழ் புவனியி லெனக்கோர்
தேசிக வுருவமாய் வந்தே
செப்பவு மதனைச் சாதியா தழலுஞ்
சிறியனே னுய்யுமா றுளதோ
வருத்தமாம் பவரோ கத்தினுக் கொருநல்
வயித்திய ஞானநன் மணியே
மாதவம் புரிவோ ரகத்திரு ளிரிய
வளரருட் சுடருமி ழொளியே
யரத்தமென் கழுநீர் நித்தில வொளிகண்
டலருநெற் றடவயல் புடைசூ
ழணிகிளர் கோவ னகரில்வா ழரசே
யாறுமா முகசிகா மணியே. (௮)

மூந்தையூழ் வினையின் பகுதியாற் றொடரு
மோகமார் காமவெவ் வெகுளி
முதிர்மயக் கிவையாற் பிறந்திறந் தயரு
மூதறி விலியுனை யறிந்தே
வந்தடைந் துய்யும் வகைபக ரென்ன
வாய்மையு முரைத்திட வலனோ
மால்கரி மதத்தின் மயக்கமீக் கொளவே
வலியபா கன்றனை யறிந்தே

யெந்தைநீ யெனையிப் போது காத்திடுக
வென்றுரைத் திடுமதோ வதுபோ
லென்மய லறிந்தே காக்கநீ யல்லா
லெளியனுக் கோருணர் வுளதோ
வந்தரத் தகடு கிழியவே யுயரு
மம்பொனூர் கோபுர மதில்சூ
ழணிகிளர் கோவ னகரில்வா ழாசே
யாறுமா முகசிகா மணியே. (௬)

சிறுமக வின்கை யொளிர்மணி யெனவுந்
தெரிதலில் விழியுடை யவன்கைச்
சேருமஞ் சனம்போன் மாலயன் றேவர்
தெளிகிலா ஞானநன் மணியை
வெறிவலி மூட பக்குவ னெஞூது
மிகவருள் சுரந்தளித் திடவும்
வெய்யனே னதையு முறுதிகொண் டேதான்
விடாதுசா தித்திடா துழலுந்
தறுகணன் கடையன் கொடியனிட் டூரன்
றக்கவ ரிடத்துறு மடயன்
சத்திய மிலாத வசத்தியன் றனைநீ
தயவுடன் கடைக்கண்வைத் தினிதா
வறிவரு ளுறுதி பத்திமெய்ஞ் ஞான
மருளியே யெனைப்புரந் தருள்வா
யணிகிளர் கோவ னகரில்வா ழாசே
யாறுமா முகசிகா மணியே. (௭)

## வாழி.

திருவெண்ணீ றணிகள் வாழி
　　தெய்வகண் டிகைத்தார் வாழி
பரவினர்க் கருளும் பஞ்சாக்
　　கரம்பகர் பவளம் வாழி
மருமலர்ச் சரணம் வாழி
　　மணிபுயக் குவளை வாழி
யருள்பொழி விழியெங் கோமா
　　ஞறுமா முகனும் வாழி.

முற்றிற்று.

---

திருக்கோவலூரில் சமாதி கொண்டு எழுந்தருளியுள்ள ஸ்ரீமத் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளை அச்சுவாமிகள் சிஷ்ய ரத்நங்களுள் ஒருவராகிய ஸ்ரீமத் அவிநாசிநாத சுவாமிகள் ஸ்தோத்தரித்த ஐந்து பிரபந்தத்துள் இது ஒன்று.



---

பு. வி. அச்சுக்கூடம், திருக்கோவலூர்.

உ

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் றிருவடி வாழ்க.

## திருக்கோவலூராதீனம்,

# ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

## குருபூஜை நாள்.

---

முதற் பரமாசாரிய சுவாமிகள்

ஸ்ரீமத் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமி...

மாசி அனுஷம் கடைசி, குருவாரம்.

இரண்டாவது சுவாமிகள்,

ஸ்ரீமத் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய

சுவாமிகள், கார்த்திகை அசுவனி மூன்றுஞ் செவ்வாய்

மூன்றுஞ் சுவாமிகள்.

ஸ்ரீமத் சிவசண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான

சிவாசாரிய சுவாமிகள், புரட்டாசி கடைசி. சோமவாரம்.

நான்காஞ் சுவாமிகள்,

ஸ்ரீமத் சிவசண்முக பரசிவ மெய்ஞ்ஞான

சிவாசாரிய சுவாமிகள்.

ஐப்பசி கடைசி ஞாயிற்றுக்கிழமை.

---

...காத்திர நூல் அக்ஷய ௵ மாசி ௴ 13 உ

...ருபூஜையில் வினியோகிக்கப்பட்டது.